26th August 1955]

*Lignite excavation in Neiveli Project.*

* 362 *Q.*—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) the progress of lignite excavation in the Neiveli Project; and

(*b*) whether there is any proposal before the Government to start any electrical industry in that area?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" (*a*) The pilot lignite quarry at Neiveli has gone to a depth of about 150 feet below ground level. Out of a total quantity of about 260 lakhs cubic feet of overburden to be excavated a quantity of about 230 lakhs cubic feet (i.e., about 85 per cent) of overburden has been removed. Further excavation work has been suspended pending the reduction of the pressure of the artesian aquifer below the lignite by large-scale pumping of water.

" (*b*) There is a proposal to establish a lignite burning thermal station at Neiveli with a capacity of 211 megawatts. There is no proposal to set up any industry in the area for the manufacture of electrical goods."

SRI V. V. RAMASWAMI :—" எலெக்ட்ரிக் எக்விப்மெண்டு செய்வதற்காக ஒரு 'தொழிற்சாலை தென்னிந்தியாவிலே ஏற்படுத்தலாம் என்ற அபிப்பிராயத்தை ஒரு வேளை மத்திய அரசாங்கம் கொண்டிருந்தால் அந்தத் தொழிற்சாலையை நம் மாகாணத்தில் இந்த இடத்தில் நிறுவு வதற்காக நமது சர்க்கார் வற்புறுத்துவார்களா ?"

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" புதிய ஹெவி எலெக்ட்ரிகல் தொழிற்சாலையை நமது ராஜ்யத்தில் அமைப்பது குறித்து இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்திக் கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் நிபுணர்கள் எல்லாம் பார்த்து எந்த இடம் தகுதிவாய்ந்தது என்று சிபார்சு செய்வதின் பேரில்தான் முடிவுசெய்யவேண்டுமென்று மத்திய அரசாங்கத்தினர் சொல்லுகின்றனர். அம்மாதிரி சென்னை ராஜ்யத்தில் எலெக்ட்ரிகல் தொழிற்சாலை ஏற்படுவதாய் இருந்தால்கூட அதற்கு நெய்வேலி தகுந்த இடம் என்று கருதப்படவில்லை. தகுந்த இடத்தைப் பார்த்து அங்கே அமைக்கலாம்."

SRI MOHAMED RAZA KHAN :—" Has the attention of the Hon. Minister been drawn to a report in the press that somewhere in the proximity of Neiveli, in the course of digging a well, black coal was found and it was a much better variety of coal than Neiveli coal and also the problem of water did not exist? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" I have also seen a press report that some kind of coal or something looking like coal—not certainly better in quality than the one available in Neiveli—was found during the course of excavation near Tindivanam. I have asked our experts to go into the question."

SRI V. V. RAMASWAMI :—" நெய்வேலிப் பிராந்தியம் இல்லா விட்டால், இந்த ஹெவி எலெக்ட்ரிகல் தொழிற்சாலைக்கு எது தகுந்த இடம் என்று சர்க்கார் கருதுகிறார்கள் என்று சொல்லப்படுமா ?"

[26th August 1955

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" அதை நிபுணர்கள் என்ன அபிப்பிராயம் சொல்லுகிறார்கள் என்பதைப் பொருத்துதான் செய்யவேண்டும். ஆவடியில்கூட அந்தத் தொழிற்சாலையை ஏற்படுத்தலாமென்று முன்பு நாம் ஒரு யோசனைகூறினோம். தண்ணீர் அதிகமாக வேண்டும். இன்னும் சில வசதிகளும் வேண்டும். அதையெல்லாம் கவனித்துத்தான் இடத்தைத் தேர்ந்தெடுக்கவேண்டும். முன்பு ஒரு நிபுணர் வந்து பார்க்கையில் ஆவடியைக் குறிப்பிட்டோம்."

*Industries in the Madras State.*

* 363 *Q.*—SRI V. V. RAMASWAMI: Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) the various industries, major, medium, small-scale and cottage in the Madras State; and

(*b*) the particular cottage industries which they propose to encourage in order to give employment to the agriculturists who are out of work during the greater part of the year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" (*a*) The details of the various industries which are proposed to be set up in the Madras State during the next five years are contained in the draft Second Five-Year Plan for the State, copies of which have been circulated to all Members of the Legislature.

" (*b*) All the cottage industries schemes proposed for inclusion in the State Plan are intended to provide greater employment opportunities to the people in the villages."

SRI V. V. RAMASWAMI :—" கிராமங்களிலே நிறுவப்படும் குடிசைத் தொழில்கள் அந்தந்த பிராந்தியத்திலேயே உற்பத்தி செய்யப்பட்டு அங்கேயே விற்பதற்கு மார்க்கெட் வசதிகள் ஏற்படும்படியாக இருக்குமா ? அல்லது, பெரிய நகர்ப்புறங்களில் இருக்கின்ற பெரிய தொழிற்சாலைகளுக்கு உதவியாக சிறு கைத்தொழில்கள் பரவலாகக் கிராமங்களில் ஏற்படுத்தப்படுமா என்று கேட்கிறேன்."

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" கூடியவரையில் பரவலாக அந்தந்த கிராமங்களுக்கு ஏற்ற தொழில் என்னவென்று பார்த்து எல்லா ஜில்லாக்களிலும் தொழில்கள் அமையும்படித்தான் ஏற்பாடு செய்யவேண்டும். அதில் இப்பொழுது கவனம் செலுத்தப்பட்டுவருகிறது."

SRI MOHAMED RAZA KHAN :—" Is it true that some of the heavy industries will come under the Government of India Five-Year Plan and not the Provincial Plan? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" There is nothing like the Provincial Plan and the Government of India Plan. The Planning Commission have got a different allotment for heavy industries. That is what has been referred to."